ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2014 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2014 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2014

ගෘහ ආර්ථික විද්‍යාව I
மனைப் பொருளியல் I
Home Economics I

28 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* கணிப்பானைப் பயன்படுத்தக் **கூடாது.**
* விடைத்தாளின் பிறப்பக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசிக்க.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என எண்ணிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் புள்ளடி (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** நீலப் பிரதியில் அடங்கும் தளத் திட்டத்தினால் காட்டப்படும் விடயம்
(1) அத்திவாரம் பற்றிய விபரங்கள்
(2) அறைகள் அமைந்துள்ள விதம்
(3) கதவுகளினதும் யன்னல்களினதும் உயரம்
(4) காற்றுத் துவாரங்களின் இட அமைவு
(5) முற்பக்கத் தோற்றம்

**2.** வரவேற்பறைக்குப் பிரிந்த நிரப்பு நிறச் சேர்மானம் உகந்தது என்பது குடும்ப உறுப்பினர்களின் கருத்தாகும். அதற்காக அவர்கள் பயன்படுத்தத்தக்க நிறங்கள் இடம்பெறும் கூட்டம்
(1) மஞ்சள், நீல ஊதா, சிவப்பு ஊதா
(2) செம்மஞ்சள், ஊதா, சிவப்புச் செம்மஞ்சள்
(3) மஞ்சள், மஞ்சட் பச்சை, பச்சை
(4) பச்சை, செம்மஞ்சள், ஊதா
(5) நீல ஊதா, சிவப்புச் செம்மஞ்சள், மஞ்சட் பச்சை

**3.** படுக்கையறைக்கு வர்ணம் தீட்டுவதற்கு மிக உகந்த நிறங்கள்
(1) இளஞ்சூடான, பிரகாசமான நிறங்கள்
(2) மென்னிற, மங்கலான நிறங்கள்
(3) குளிர்ச்சியான, மென் நிறங்கள்
(4) இளஞ்சூடான, கடும் நிறங்கள்
(5) குளிர்ச்சியான, பிரகாசமான நிறங்கள்

**4.** ஓர் அறையை விசாலமானதாகக் காட்டுவதற்கு மேற்கொள்ளத்தக்க நடவடிக்கை
(1) அழகான பாத்திரங்களை வைத்தல்
(2) கருங்காலி மரத்தினால் செய்யப்பட்ட சோபாவை வைத்தல்
(3) சுவர்ச் சிற்றலுமாரிகளைப் பொருத்துதல்
(4) குறைந்தளவு தளபாடங்களை வைத்தல்
(5) சிறிய யன்னல்கள் பலவற்றைப் பொருத்துதல்

**5.** மலர் ஒழுங்கு தொடர்பாக மாணவர்கள் முன்வைத்த சில விடயங்களுள் சரியானது எது ?
(1) மலர் ஒழுங்கு செய்வதற்கு உயரம் குறைந்த பூந்தாழிகள் தெரிவு செய்யப்படுகின்றன.
(2) மலர் ஒழுங்கில் மேலே சிறிய மலர்கள் இடப்படுகின்றன.
(3) நறுமணமற்ற பூக்கள் மாத்திரம் பயன்படுத்தப்படுகின்றன.
(4) உலர்ந்த மலர்கள் மலர் ஒழுங்கில் கீழே பயன்படுத்தப்படுகின்றன.
(5) இலைகளும் கிளைகளும் மலர் ஒழுங்கின் அடியில் பயன்படுத்தப்படுகின்றன.

**6.** உணவைக் கலப்பதற்குப் பயன்படுத்தப்படும் மின் உபகரணங்கள் பற்றி மாணவர்கள் தெரிவித்த சில கருத்துகள் கீழே தரப்பட்டுள்ளன.
A - வெப்பத்தைக் கட்டுப்படுத்த வெப்ப நிறுத்தி (thermostat) இருக்கின்றது.
B - மூவூசிச் செருகியைப் பயன்படுத்தல் மிகவும் உகந்தது.
C - சில சாதனங்களில் சுழற்சிக் கதியைக் கட்டுப்படுத்தலாம்.
D - உலர் உணவுக் கூறுகளைக் கலப்பதற்கு உகந்தது.
E - உணவு உருப்படிகளுக்கு ஏற்ப வெட்டும் அலகுகளை மாற்றலாம்.
மேற்குறித்தவற்றில் அரைப்பான் (blender) பற்றிய கூற்றுகள் இடம்பெறுவது
(1) A, B ஆகியவற்றில்
(2) A, E ஆகியவற்றில்
(3) B, C ஆகியவற்றில்
(4) C, D ஆகியவற்றில்
(5) D, E ஆகியவற்றில்

[ பக். 2 ஐப் பார்க்க

7. வெள்ளொளிர்வு மின்குமிழில் பயன்படுத்தப்படும் சடத்துவ வாயு
(1) நைதரசன் (2) காபனீரொட்சைட்
(3) ஆகன் (4) கந்தகவீரொட்சைட்
(5) காபனோரொட்சைட்

8. இரண்டு அத்தியாவசிய அமினோ அமிலங்கள்
(1) கிளைசீனும் இலைசீனும் (2) திரிப்ரோபனும் புரோலீனும்
(3) இலைசீனும் மெத்தியோனினும் (4) லியூசீனும் ரைரோசீனும்
(5) வலீனும் கிளைசீனும்

9. மீன் எண்ணெயில் இருக்கும் ஒரு வகை விரும்பத்தக்கக் கொழுப்பமிலம்
(1) ஒமேகா 3 கொழுப்பமிலங்கள் (2) ஒமேகா 6 கொழுப்பமிலங்கள்
(3) ஒரு நிரம்பா கொழுப்பமிலங்கள் (4) திரான்ஸ் கொழுப்பமிலங்கள்
(5) நிரம்பிய கொழுப்பமிலங்கள்

10. உடலில் தசைப்பதன் (muscle tone) கட்டுப்பாட்டுடன் தொடர்புபட்ட கனிப்பொருள்
(1) சோடியம் (2) அயடீன் (3) கல்சியம் (4) நாகம் (5) மகனீசியம்

11. குருதி உறைதலில் செயற்படும் இரு போசணைப் பொருள்கள்
(1) அயடீனும் விற்றமின் C உம் (2) கல்சியமும் விற்றமின் K உம்
(3) இரும்பும் விற்றமின் A உம் (4) கல்சியமும் விற்றமின் C உம்
(5) இரும்பும் விற்றமின் K உம்

12. உடலில் இரும்பு அகத்துறிஞ்சலுக்குத் தடையாக இருக்கும் ஒரு காரணி
(1) ஐதரோக்குளோரிக்கமிலம் (2) சித்திரிக்கமிலம்
(3) அமினோ அமிலங்கள் (4) பைற்றிக் அமிலம்
(5) அஸ்கோபிக் அமிலம்

13. ஒரு விற்றமினின் சில இயல்புகள் கீழே தரப்பட்டுள்ளன.
❄ வெளிறிய மஞ்சள் நிற விற்றமின்
❄ சிறுநீரில் மேலதிகமானவை கழிக்கப்படும்.
❄ மிகையாக உள்ளெடுக்கும்போது நச்சியல்பு அற்றது.
❄ சமைக்கும்போது இலகுவாக அழிக்கப்படும்.
❄ நேரடியாகக் குருதியருவியினுள் அகத்துறிஞ்சப்படுகிறது.

இவ்விற்றமின்
(1) இரைபோபிளேவின் (2) இரெற்றினோல்
(3) கோலிகல்சிபெரோல் (4) நப்தோ குயினோன்
(5) ரொக்கோபெரோல்

14. ஈரலில் சேமித்து வைக்கப்படும் இரண்டு விற்றமின்கள்
(1) விற்றமின் A உம் C உம் (2) விற்றமின் A உம் D உம்
(3) விற்றமின் $B_1$ உம் K உம் (4) விற்றமின் $B_2$ உம் D உம்
(5) விற்றமின் C உம் K உம்

15. விலங்கு உணவு மூலங்களில் **இல்லாதவை**
(1) விற்றமின் A உம் பொசுபரசும் (2) விற்றமின் C உம் நார்களும்
(3) விற்றமின் $B_3$ உம் கல்சியமும் (4) நார்களும் இரும்பும்
(5) விற்றமின் K உம் நார்களும்

16. குறைபாட்டு அறிகுறியாக முரசுகளிலிருந்து குருதி வெளியேறலுக்குக் காரணமாக இருக்கும் போசணைப் பொருள்
(1) விற்றமின் A (2) விற்றமின் $B_2$ (3) விற்றமின் $B_3$ (4) விற்றமின் C (5) விற்றமின் K

17. போலிக் அமிலம், விற்றமின் $B_{12}$ என்னும் இரு B கூட்ட விற்றமின்களின் குறைபாடு காரணமாக ஏற்படும் நோய்
(1) அனிமியா (2) பெரிபெரி
(3) ரிக்கெட்ஸ் (4) குவாசியோக்கோர்
(5) என்புநெய்யரியாதல் (ஒஸ்ரியோபோரோசிஸ்)

[ பக். 3 ஐப் பார்க்க

18. விற்றமின் E அதிக அளவில் இருக்கும் உணவு மூலங்கள்
(1) சோளம், கோதுமை, மீன்
(2) முட்டை, பருப்பு, வல்லாரை
(3) எள், நிலக்கடலை, சோயா
(4) இறைச்சி, பால், நெத்தலி
(5) தேங்காய், பாசிப்பயறு, குரக்கன்

19. 100 கிராம் அரிசியின் போசணை அமைப்பு கீழே தரப்பட்டுள்ளது.

| | |
|---|---|
| காபோவைதரேற் | 78.2 g |
| புரதம் | 6.8 g |
| கொழுப்பு | 0.5 g |
| நீர் | 13.7 g |

அதன் கலோரி பெறுமானம்
(1) 245 கலோரிகள்
(2) 280 கலோரிகள்
(3) 345 கலோரிகள்
(4) 380 கலோரிகள்
(5) 425 கலோரிகள்

20. பின்வருவன முட்டைகள் தொடர்பாக மாணவன் ஒருவன் எழுதிய குறிப்பிலிருந்து பெறப்பட்ட சில விடயங்கள் ஆகும்.
A - விற்றமின் A அதிகமாக உள்ள உணவு ஆகும்.
B - சமிபாடு வாயில் ஆரம்பமாகிறது.
C - கல்சியம் அதிகமாகக் கொண்டது.
D - வெள்ளைக்கருவிலும் பார்க்க மஞ்சட்கரு அதிக கொழுப்பைக் கொண்டது.
E - முட்டையைக் கழுவிக் களஞ்சியப்படுத்தினால் விரைவில் பழுதடையும்.
இவற்றுள் சரியான விடயங்கள்
(1) A உம் C உம் ஆகும்.
(2) C உம் E உம் ஆகும்.
(3) A, D, E என்பனவாகும்.
(4) B, C, D என்பனவாகும்.
(5) C, D, E என்பனவாகும்.

21. பின்வருவனவற்றுள் எது கூட்டுப் புரதம் ?
(1) மயோசின்
(2) குளுட்டன்
(3) ஜெலற்றீன்
(4) இலிப்போ புரதம்
(5) ஓவோவிற்றாலின்

22. பூசணிக்காய், பீற்றூட், அகத்தி என்பவற்றில் காணப்படும் பிரதான நிறப்பொருள்கள் முறையே
(1) கரட்டினோயிட், அந்தோசயனின், குளோரோபில்
(2) குளோரோபில், பிளேவோன், கரட்டினோயிட்
(3) கர்ட்டினோயிட், குளோரோபில், அந்தோசயனின்
(4) கரட்டினோயிட், அந்தோசயனின், பிளேவோன்
(5) அந்தோசயனின், பிளேவோன், குளோரோபில்

23. பழங்களிலிருந்து தயாரிக்கப்படும் ஜாம் இன் இழையவமைப்புக்குக் காரணமான காபோவைதரேற்
(1) செலுலோஸ்
(2) இனூலின்
(3) மாப்பொருள்
(4) பிசின்
(5) பெக்ரின்

24. சிபார்சு செய்யப்பட்ட நாளாந்த போசணைத் தேவையின்படி (2007) உச்ச அளவான கலோரித் தேவையுள்ள தனியாட்கள்
(1) கட்டிளம் பருவ ஆண்கள்
(2) கர்ப்பிணித் தாய்மார்கள்
(3) வயதுவந்த பெண்கள்
(4) பாலூட்டும் தாய்மார்கள்
(5) கட்டிளம் பருவ பெண்கள்

25. அதிஉயர் வெப்பம், நற்காப்புப் பொருள்கள் சேர்த்தல் ஆகிய நுட்பங்களைப் பிரதானமாகப் பயன்படுத்தி பதப்படுத்தப்பட்டு பேணப்படும் உணவுகள் முறையே
(1) தக்காளிச் சட்னி, ஒடுக்கிய பால் (ரின்பால்)
(2) தயிர், கருவாடு
(3) விளாம்பழ ஜாம், மலே அச்சாறு
(4) பால் மா, உலர்த்திய பலாக்காய் (dried jak)
(5) கிருமியழித்த பால், மாம்பழ கோடியல்

26. பின்வருவனவற்றுள் இரசாயன நற்காப்புப் பேண் பொருள் **அல்லாதது** எது ?
(1) சித்திரிக்கமிலம்
(2) சோடியம் பென்சோயேற்
(3) சோடியம் இருகாபனேற்
(4) சோடியம் நைத்திரைற்
(5) பென்சோயிக் அமிலம்

[ பக். 4 ஐப் பார்க்க

2476

**27.** பின்வருவன X என்ற நற்காப்புச் செய்து பேணிப் பதப்படுத்தப்பட்ட உணவுடன் சம்பந்தப்பட்ட தோற்றப்பாடுகள் ஆகும்.

❈ pH பெறுமானம் குறைவு
❈ புறப் பிரசாரணம்
❈ பரவல்

இவ் நற்காப்புச் செய்து பேணப்பட்ட உணவு X ஆனது
(1) உருளைக்கிழங்கு தோசி
(2) சமன் மீன்
(3) சீனிசம்பல்
(4) மீன் புளித் தீயல் (மீன் அம்புல் தியால்)
(5) நெத்தலிக் கருவாடு

**28.** உணவு நஞ்சாதலுக்கு ஏதுவான பற்றீரியா இனம்
(1) ஹெலிக்கோபக்ரர் பைலோரா *(Helicobactor pylora)*
(2) குளோஸ்திரிடியம் பொட்டுலினம் *(Clostridium botulinum)*
(3) அசற்றோபக்ரர் அசிற்றை *(Acetobactor aceti)*
(4) ஸ்ரெப்ரோகொக்கஸ் லக்ரிஸ் *(Streptococus lactis)*
(5) லக்ரோபசிலஸ் பல்காரிக்கஸ் *(Latobacillus bulgaricus)*

**29.** மரக்கறி உணவு உண்ணும் ஒருவருக்கு மிக உகந்த உணவு வேளையாகத் (வேளை உணவு) திட்டமிடப்படத்தக்கது பின்வருவனவற்றுள் எது ?
(1) சோறு, போஞ்சிக் கறி, வெண்டிக்காய் வதக்கல், பொன்னாங்கானி வறை (சுண்டல்), கெக்கரி சலாது
(2) சோறு, உருளைக்கிழங்குக் கறி, சிறகு அவரை வதக்கல், கத்தரிக்காய் மோஜு, தக்காளி சலாது
(3) சோறு, பாசிப்பயறுக் கறி, கோவாக் கறி, அகத்தியிலை வறை, பீர்க்கங்காய் கறி
(4) சோறு, கடலைக்கறி, பாகற்காய் வதக்கல், சாம்பல் வாழைக்காய் கறி, வல்லாரைச் சம்பல்
(5) சோறு, பருப்புக் கறி, லீக்ஸ் வதக்கல், சோயா கட்லட், கரட் சம்பல்

**30.** உடலின் முன்சிறுகுடலில் நடைபெறும் காபோவைதரேற் சமிபாட்டுச் செயற்பாடு
(1) லக்ரோஸ் குளுக்கோசாகவும் கலக்ரோஸ் ஆகவும் உடைக்கப்படல்
(2) சுக்ரோஸ் குளுக்கோசாகவும் பிரற்றோசாகவும் உடைக்கப்படல்
(3) மாப்பொருள் எளிய பல்சக்கரைட்டுகளாக உடைக்கப்படல்
(4) மோல்ற்றோஸ் குளுக்கோசாக உடைக்கப்படல்
(5) எளிய பல்சக்கரைட்டுகள் இருசக்கரைட்டுகளாக உடைக்கப்படல்

**31.** உணவுக் கால்வாயினுள் அதிக அளவு நீர் மீள அகத்துறிஞ்சப்படுவது
(1) இரைப்பையில் ஆகும்.
(2) முன்சிறுகுடலில் ஆகும்.
(3) சிறுகுடலில் ஆகும்.
(4) பெருங்குடலில் ஆகும்.
(5) நேர்குடலில் ஆகும்.

**32.** புரத அனுசேபத்தில் அமினோ அமிலமானது அமினோ கூட்டமாகவும் காபொட்சைல் கூட்டமாகவும் உடைக்கப்படுவது
(1) ஈரலில் ஆகும்.
(2) மண்ணீரலில் ஆகும்.
(3) இரைப்பையில் ஆகும்.
(4) சதையியில் ஆகும்.
(5) முன்சிறுகுடலில் ஆகும்.

**33.** போசணைப் பொருள்களின் அனுசேபத்திற்குத் தேவையான துணை நொதியங்களின் தொகுப்பில் செயற்படும் இரண்டு விற்றமின்களாவன
(1) தயமினும் விற்றமின் C உம் ஆகும்.
(2) இரைபோபிளேவினும் நயாசினும் ஆகும்.
(3) பிரிடொக்சினும் விற்றமின் D உம் ஆகும்.
(4) விற்றமின் E உம் விற்றமின் K உம் ஆகும்.
(5) விற்றமின் A உம் போலிக் அமிலமும் ஆகும்.

**34.** சில நோய்கள் தொடர்பாக மாணவர்களால் முன்வைக்கப்பட்ட சில விடயங்கள் கீழே தரப்பட்டுள்ளன.

A - உணவு வேளையில் நார் உணவுப் பொருள்கள் சேர்க்கப்பட வேண்டும்.
B - மூன்று பிரதான வேளை உணவிற்குப் பதிலாக சிறு உணவு வேளைகள் பலவற்றை எடுத்தல் விரும்பத்தக்கதாகும்.
C - சிறுநீரகங்கள் மாத்திரம் பாதிக்கப்படும்.
D - நிறை குறைதலும் தாகமும் ஆரம்ப நோய் அறிகுறிகளாகும்.
E - பாரம்பரியச் செல்வாக்கினைக் கொண்ட நோய்

இவற்றுள் நீரிழிவுடன் தொடர்புள்ள விடயங்கள்
(1) A, B, C என்பன மாத்திரம்
(2) A, B, D என்பன மாத்திரம்
(3) A, B, E என்பன மாத்திரம்
(4) A, B, C, D என்பன மாத்திரம்
(5) A, B, D, E என்பன மாத்திரம்

[ பக். 5 ஐப் பார்க்க

**35.** பெண்களில் இனப்பெருக்க ஓமோன்களின் சுரத்தலைத் தூண்டும் அகஞ்சுரக்கும் சுரப்பி
(1) கபச் சுரப்பி (2) அதிரீனற் சுரப்பி
(3) பராதைரோயிட் சுரப்பி (4) வியர்வைச் சுரப்பி
(5) தைரோயிட் சுரப்பி

**36.** பிரசவத்திற்கு முன்னரான தாய் சேய் பிணியாய் (antenatal clinic) நிலையத்தில் முதிர் மூலவுருவின் நரம்புக்குழாயின் வளர்ச்சிக்காக வழங்கப்படும் போசணைப் பொருள்/குறைநிரப்புப் போசணைப் பொருள் யாது ?
(1) விற்றமின் C (2) போலிக் அமிலம்
(3) திரிபோஷா (4) கல்சியம்
(5) இரும்பு

**37.** பின்வருவன பச்சிளங்குழந்தை ஒன்றினால் காட்டப்படும் சில இயல்புகள் ஆகும்.
A - உரத்த சத்தத்துக்குத் தலையைத் திருப்புதல்
B - பகல் நேரத்தில் நீண்ட நேரம் நித்திரை செய்தல்
C - தூண்டல்களுக்குக் கிளர்ச்சியினைக் காட்டல்
D - அசையும் பொருள்களை நோக்கி கண்ணைக் குவியப்படுத்தல்
E - பொதுவாக அழுவதன் மூலம் துலங்குதல்
இவற்றுள் தெறிவினைச் செயற்பாடுகளாவன
(1) A உம் B உம் ஆகும். (2) B உம் D உம் ஆகும். (3) C உம் E உம் ஆகும்.
(4) A, B, C ஆகியன. (5) C, D, E ஆகியன.

**38.** தற்கால தேசிய நிர்ப்பீடனமாக்கல் நிகழ்ச்சித் திட்டத்திற்கு ஏற்ப JE (ஜப்பானிய என்செபலைற்றிஸ்) வக்சின் வழங்கப்படுவதற்குரிய பிள்ளையின் வயது
(1) 2 மாதங்கள் (2) 4 மாதங்கள் (3) 6 மாதங்கள்
(4) 9 மாதங்கள் (5) 18 மாதங்கள்

**39.** பின்வருவன குழந்தைகளின் இயக்க விருத்திக்கு உதவுவதற்கு அவர்களைப் பராமரிக்கும் பெரியோர் பின்பற்றும் சில முறைகள் ஆகும்.
A - அவர்களின் முதிர்ச்சிக்கு ஏற்ற செயற்பாடுகளில் ஈடுபடுத்தல்
B - அவர்களைப் பல்வேறு செயற்பாடுகளுக்குப் பயிற்றுவித்தல்
C - அவர்களுக்கு உகந்த அனுபவங்களை வழங்குதல்
D - அவர்களை பலாத்காரமாகச் செயற்பாடுகளில் ஈடுபடுத்தல்
E - அவர்களுக்கு உகந்த விளையாட்டுப் பொருள்களை வழங்குதல்
இவற்றுள் அவர்கள் பின்பற்றும் சரியான வழிமுறைகள்
(1) A, B, C ஆகியன. (2) A, C, E ஆகியன. (3) A, D, E ஆகியன.
(4) B, C, D ஆகியன. (5) B, D, E ஆகியன.

**40.** முன்பிள்ளை அபிவிருத்தி நிலையத்தினால் மேற்கொள்ளப்படும் பின்வரும் செயற்பாடுகளுள் சமூக விருத்திக்கு மிகவும் உதவக்கூடிய செயற்பாடு
(1) வரைதல் (2) களியினால் உருவங்களை வடிவமைத்தல்
(3) ஊஞ்சலாடுதல் (4) எழுத்துகள் எழுதுதல்
(5) விளையாட்டு வீட்டில் விளையாடுதல்

**41.** பிள்ளைகளின் விருத்தி மற்றும் நடத்தைக் கோலங்களுடன் தொடர்பான சில விடயங்கள் கீழே தரப்பட்டுள்ளன.
A - நிறை அதிகரிக்கும் வீதம் வீழ்ச்சி அடைதலைக் காட்டுதல்
B - உடலியல் ரீதியாக மனவெழுச்சிகளை வெளிகாட்டல்
C - என்பு அடர்த்தியில் விரைவான அதிகரிப்பைக் காட்டல்
D - கோபாவேசத்தைக் காட்டுதல்
E - செயற்பாடுகள் ஊடாக கற்றல் அனுபவங்களைப் பெறல்
இவற்றுள் பின்பிள்ளைப் பருவப் பிள்ளைகளுடன் தொடர்புடைய விடயங்கள்
(1) A உம் C உம் (2) A உம் E உம் (3) B உம் C உம் (4) D உம் E உம் (5) C, D, E ஆகியன.

**42.** பின்பிள்ளைப் பருவத்திலும் கட்டிளம் பருவத்திலும் காட்டப்படும் ஓர் இயல்பு
(1) முன்மாதிரியாக இருக்க விரும்புதல் (2) போலச் செய்தல்
(3) சுயநலத் தன்மை (4) சுய இரக்கம்
(5) பகற்கனவு காணல்

[ பக். 6 ஐப் பார்க்க

**43.** செதில்தன்மையான தோற்றமும் ஒளிபுகவிடும் தன்மையும் இரண்டு வகையான நார்கள் காட்டும் இரண்டு இயல்புகள் ஆகும். இவ் இரண்டு நார்களும் முறையே

(1) பொலிஎஸ்ரர், இலினன் என்பனவாகும். (2) கம்பளி, சணல் என்பனவாகும்.
(3) றேயோன், இலினன் என்பனவாகும். (4) கம்பளி, நைலோன் என்பனவாகும்.
(5) இலினன், சணல் என்பனவாகும்.

**44.** பின்வருவன நார்களின் சில இயல்புகள் ஆகும்.

A - இழுபடத்தக்கது.
B - சலவை செய்தல் நார்களைப் பலவீனமடையச் செய்யும்.
C - எரிக்கும்போது இறக்கைகள் எரியும் மணம் வெளிவரும்.
D - அமிலங்களுடனோ காரங்களுடனோ தாக்கம் புரிவதில்லை.
E - சாயங்களுடன் மிகக் குறைவான நாட்டம் உடையது.

மேற்குறித்த இயல்புகளுள் கம்பளி நாரின் இயல்பு

(1) A, B, C ஆகியன. (2) B, C, D ஆகியன. (3) C, D, E ஆகியன.
(4) A, B, D, E ஆகியன. (5) B, C, D, E ஆகியன.

**45.** மார்பு அளவு 85 cm (34 ") உள்ள பெண்ணொருவருக்கு உடற்பகுதியின் முற்பக்க அடிப்படை மாதிரியுருவை வரைவதற்கு கணிக்கப்பட்ட மார்பு அளவு

(1) 20.5 cm. (2) 21.2 cm. (3) 22.6 cm.
(4) 23.3 cm. (5) 24.7 cm.

**46.** கட்டையான கொழுத்த கட்டிளம் பெண்பிள்ளைக்கான சாரி இரவிக்கைக்கு மிக உகந்த கழுத்து அமைப்பினையும் கைப்பாங்கினையும் காட்டுவது பின்வரும் வரிப்படங்களுள் எது ?




**47.** துணிகளை மினுக்குவதில் (mecerization) பயன்படுத்தும் இரசாயனப் பொருள்

(1) சோடியம் காபனேற் (2) கல்சியம் குளோரைட்
(3) மகனீசியம் சல்பேற் (4) சோடியம் ஐதரொட்சைட்
(5) கல்சியம் காபனேற்

**48.** அதன் உற்பத்திச் செயன்முறையின்போது 'நிறையேற்றல்' இற்கு உட்படுத்தப்படும் நார் வகை எது ?

(1) பருத்தி (2) பட்டு (3) கம்பளி (4) இலினன் (5) பொலிஎஸ்ரர்

**49.** ஒட்சியேற்ற வெளிற்றல் காணப்படும் ஒரு சந்தர்ப்பம்

(1) வெப்பமான சூரிய ஒளியில் உலர்த்தல்
(2) நீலமிடல்
(3) பிரான்சிய சோக் பிரயோகித்த பின் உலர்த்தல்
(4) புல் தரையின் மீது காயவிடல்
(5) வினாகிரியில் அமிழ்த்தி வைத்தல்

**50.** பின்வருவனவற்றுள் உலர் சலவை (dry cleaning) தொடர்பான சரியான கூற்று எது ?

(1) உலர் சலவைக் கருவிகளில் சில மணித்தியாலங்கள் ஊற வைத்தல்
(2) வர்ணத் துணிகளுக்கு இது உகந்ததல்ல.
(3) பயன்படுத்தும் இரு வகையான தூய்தாக்கும் சலவைக் கருவிகளாவன கரைப்பான்களும் உறிஞ்சிகளும் ஆகும்.
(4) எந்த வகையான நாரினால் செய்யப்பட்ட துணிகளுக்கும் உகந்ததாகும்.
(5) தூய்தாக்கும் சலவைக் கருவிகளின் வினைத்திறனை அதிகரிப்பதற்குச் சிறிது உப்பு சேர்க்கப்பட வேண்டும்.

***

AL/2014/28/T-II

2476



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2014 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2014 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2014

ගෘහ ආර්ථික විද්‍යාව II
மனைப் பொருளியல் II
Home Economics II

28 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

**அறிவுறுத்தல்கள்:**

* பகுதி **I** இல் **1** ஆம் வினா உட்பட **மூன்று** வினாக்களுக்கும் பகுதி **II** இல் **5** ஆம் வினா உட்பட **நான்கு** வினாக்களுக்கும் விடை எழுதுக.

## பகுதி I

(**1** ஆம் வினாவும் வேறு **இரண்டு** வினாக்களும் உட்பட **மூன்று** வினாக்களுக்கு விடை எழுதுக.)

**1.** அழகியல் ரீதியாகப் பெறுமதி வாய்ந்த தயானியின் வீட்டின் வரவேற்பு, அதனுடன் சேர்ந்த சாப்பாட்டு அறை என்பவற்றின் பரும்படியான தரைப்படம் பின்வரும் வரிப்படத்தில் காட்டப்பட்டுள்ளது. அது ஒழுங்கமைக்கப்பட்டுள்ள விதமும் பின்வரும் வரிப்படத்தில் காட்டப்பட்டுள்ளது.



(i) வரிப்படத்தை நன்கு அவதானித்து, அதன் மூலம் எடுத்துக் காட்டப்படும் **இரண்டு** கலை மூலத்துவங்களையும் **இரண்டு** காட்டுருக் கோட்பாடுகளையும் குறிப்பிடுக.

(ii) நீங்கள் குறிப்பிட்ட ஒரு கலை மூலத்துவமும் காட்டுருக் கோட்பாடும் அறையின் உள்ளக அலங்காரத்திற்கு உதவும் விதத்தை விமர்சிக்க.

(iii) இவ்வீட்டின் வெவ்வேறு அறைகளுக்கு திரைச்சீலைகளை நிர்மாணிக்கும்போது கருத்திற் கொள்ள வேண்டிய விடயங்களைக் காரணங்களுடன் விளக்குக.

(iv) இவ்வீட்டின் படுக்கை அறையின் கட்டிலுக்கான படுக்கை விரிப்பை (bed cover) அலங்கரிப்பதற்கு, அதன் மத்தியில் ஓர் உகந்த காட்டுருவை உருவாக்குக.

(v) நீர் உருவாக்கிய காட்டுருவை வெவ்வேறு தையல் முறைகளைப் பயன்படுத்தி அலங்கரிக்கும் விதத்தை விவரிக்குக. நிறச் சேர்மானத்தையும் எடுத்துரைக்க.

[ பக். 2 ஐப் பார்க்க

**2.** (i) வீட்டில் பயன்படுத்தும் எரிபொருளைச் சிக்கனப்படுத்துவதற்கு மேற்கொள்ளத்தக்க **நான்கு** நடவடிக்கைகளை எழுதுக.

(ii) '1500 W எனக் குறிப்பிடப்பட்டுள்ள மின்னுபகரணத்தை 230 V மற்றும் 5 A கொண்ட உமது வீட்டு மின்சுற்றில் பயன்படுத்துவது பொருத்தமற்றதாகும்.' இதனை நியாயப்படுத்துக.

(iii) பின்வரும் வீட்டு வளங்களிலிருந்து உயர்ந்தபட்சப் பயன்பாட்டைப் பெறுவதற்கு மேற்கொள்ளத்தக்க நடவடிக்கைகளை ஆராய்க.

(*a*) நேரம் (*b*) உழைப்பு (*c*) இடவசதி (வெளி) (*d*) பணம்

**3.** (i) துணிகளின் உற்பத்தியில் பயன்படுத்தும் நார்களை வகைப்படுத்திக் காட்டுக.

(ii) பொறிமுறை நேர்த்தி ஒன்றினைப் பெயரிட்டு, விவரிக்குக.

(iii) தைத்த சாரி இரவிக்கை ஒன்றை அணிந்து பார்க்கும்போது பின்வரும் குறைபாடுகள் இனங்காணப்பட்டன.

(*a*) முன்கழுத்து வடிவத்தின் (neckline) மத்தியில் தளர்வு

(*b*) கைக்(புயக்)குழைச்சடியின் முன் பகுதியில் தளர்வு

இக்குறைபாடுகளை எவ்வாறு சீர்செய்யலாம் என்பதை வரிப்படங்கள் மூலம் விளக்குக.

(iv) சாரி இரவிக்கையின் முன் திறப்பைத் தைத்து, அம்முன்திறப்பு மூடப்படும் விதத்தை வரிப்படங்களின் உதவியுடன் விவரிக்குக.

**4.** (i) வீட்டுத் திட்டமிடற் கோட்பாடுகளை உகந்த முறையில் பயன்படுத்தி வீட்டைத் திட்டமிடல் முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

(*a*) வீட்டைத் திட்டமிடலின் **நான்கு** கோட்பாடுகளைக் குறிப்பிடுக.

(*b*) நீர் குறிப்பிட்ட கோட்பாடுகளுள் **இரண்டு** கோட்பாடுகள் மனோரம்மியமான வாழ்க்கைச் சூழலை ஆக்குவதற்கு உதவும் விதத்தை உதாரணங்கள் தந்து, விளக்குக.

(ii) இல்லத் துணியணிகளில் (household linen) கவனஞ் செலுத்துவதற்கு போதிய நடைமுறைகளைப் பின்பற்றல் அத்துணியணிகள் நீடித்து நிலைப்பதற்கு ஏதுவாகும்.

(*a*) வீட்டில் புடைவைகளையும் ஆடைகளையும் சலவை செய்யும் செயன்முறையை பாய்ச்சல் கோட்டுப் படம் மூலம் காட்டுக.

(*b*) பல்வேறு வகைப்பட்ட இல்லத் துணியணிகளை அழுத்தும்போதும் களஞ்சியப்படுத்தி வைக்கும்போதும் கருத்திற் கொள்ள வேண்டிய விடயங்களை விளக்குக.

## பகுதி II

(5ஆம் வினாவும் வேறு **மூன்று** வினாக்களும் உட்பட **நான்கு** வினாக்களுக்கு விடை எழுதுக.)

**5.** தரம் 12 இன் மாணவர் குழுவினால் தமது பொதுச் செயற்றிட்டத்துக்காக 'தரம் 4, 5 இல் உள்ள பிள்ளைகளின் நலனுக்காக மேற்கொள்ளத்தக்க நடிவக்கைகள்' தொடர்பான கற்கை பற்றிய தலைப்பு தெரிவு செய்யப்பட்டுள்ளது. இச் செயற்றிட்டத்தின் பிரதான நோக்கம் பிள்ளைகளின் போசணை, உடனலம், சுகாதாரம் போன்ற பல்வேறு அபிவிருத்தி அம்சங்களிலும் கவனஞ் செலுத்துவதாகும்.

இறுதி அறிக்கையில் இப்பிள்ளைகளின் நலன் தொடர்பான ஆலோசனைகளும் உள்ளடக்கப்பட்டுள்ளன.

(i) தரம் 4, 5 பிள்ளைகளின் உடனலமும் சுகாதாரமும் அவர்களின் போசணையில் செல்வாக்குச் செலுத்தும் விதத்தை விவரிக்குக.

(ii) சில மாணவர்கள் தவறான உணவுப் பழக்கங்களைப் பின்பற்றுவதனால் தீங்கு விளைவிக்கும் அறிகுறிகளைக் காணக்கூடியதாகவுள்ளது. அத்தகைய **மூன்று** அறிகுறிகளைக் குறிப்பிட்டு, அவற்றைத் தவிர்ப்பதற்கு மேற்கொள்ளத்தக்க நடவடிக்கைகளை ஆராய்க.

(iii) இம் மாணவர்கள் இடைவேளையின்போது உட்கொள்வதற்கு உகந்த வேளை உணவினை (உணவு வேளையை) திட்டமிடுக. உமது தெரிவுக்கான காரணங்களைத் தருக.

(iv) தரம் 4, 5 மாணவர்களின்

(*a*) உடல் விருத்தி

(*b*) இயக்க விருத்தி

ஆகியவற்றின் இயல்புகளை விளக்குக.

(v) இம் மாணவர்களின் சமூகமயமாக்கல் தொடர்பாக மேற்கொள்ளத்தக்க நடவடிக்கைகளை ஆராய்க.

[ பக். 3 ஐப் பார்க்க

**6.** (i) பிள்ளை அபிவிருத்திக்குரிய மூன்று விருத்திகளுள் கட்டிளம் பருவத்தினருக்குரிய சிறப்பான இயல்புகள் **இரண்டு** வீதம் குறிப்பிடுக.

(ii) பிள்ளையின் ஆளுமை விருத்தியில்

(*a*) வீடு

(*b*) பாடசாலை

பங்களிப்புச் செய்யும் விதத்தை விளக்குக.

(iii) பிள்ளையின் கணித எண்ணக்கருக்களின் விருத்திக்கு முன்பிள்ளை அபிவிருத்தி நிலையத்தின் மூலம் மேற்கொள்ளத்தக்க **இரண்டு** செயற்பாடுகளை விவரிக்குக.

(iv) சுகமான குழந்தைப் பிரசவத்தில் செல்வாக்குச் செலுத்தும் காரணிகளை ஆராய்க.

**7.** (i) முன் பிள்ளைப் பருவப் பிள்ளைகளிடையே காணத்தக்க இரண்டு குறைபோசணை நிலைமைகளான

(*a*) உடல் உருகுதல் (wasting)

(*b*) குறள் தன்மை (stunting)

என்பவற்றை அறிமுகஞ் செய்க.

(ii) முன்பிள்ளைப் பருவப் பிள்ளைக்குரிய உணவு தயாரிக்கும்போதும் பரிமாறும்போதும் வலியுறுத்தப்பட வேண்டிய விடயங்களை ஆராய்க.

(iii) போசணை தொடர்பான செய்முறைச் செயற்பாடுகளின்போது பின்பற்றப்படும் பின்வரும் படிமுறைகள் உணவின் நேர்த்தியில் எங்ஙனம் செல்வாக்குச் செலுத்துகின்றன என்பதை விமர்சிக்குக.

(*a*) மாப்பசை தாயரிக்கும்போது குளிர்நீர் பயன்படுத்தல்

(*b*) இறைச்சி, மீன் ஆகியவற்றைச் சமைப்பதற்கு முன் வாசனைச் சரக்குகள் சேர்த்து சிறிது நேரம் வைத்திருத்தல்

**8.** (i) பொதி செய்யும் பொருளாக கண்ணாடியைத் தெரிவு செய்வதற்கான காரணங்களை விளக்குக.

(ii) தொற்றா நோய்களைத் தடுப்பதற்கும் கட்டுப்படுத்துவதற்கும் பின்பற்ற வேண்டிய நடைமுறைகளை ஆராய்க.

(iii) பின்வருவன பற்றிக் கருத்துரைக்க.

(*a*) உணவைச் சமைப்பதன் முக்கியத்துவம்

(*b*) மரக்கறிகளைத் தயார் செய்யும்போதும் சமைக்கும்போதும் பின்பற்ற வேண்டிய நடைமுறைகள்

(*c*) பெரும்பாலான உணவுகளைச் சமைக்கும்போது நீரிலிட்டு அவித்தல் பயன்படுத்தப்படுவதற்கான காரணங்கள்

(*d*) தகரத்திலடைத்த உணவுகளை நுகர்வதன் அனுகூலங்களும் பிரதிகூலங்களும்

**9.** (i) உணவு வேளைகளில் சேர்க்கப்படும் பருப்பு வகைகளின் (pulses) போசணை முக்கியத்துவத்தினைக் குறிப்பிடுக.

(ii) உணவுப் பாதுகாப்பைப் பேணுவதில்

(*a*) உணவு உற்பத்தியாளர்

(*b*) உணவு விற்பனையாளர்

ஆகியோர் பின்பற்ற வேண்டிய நடைமுறைகளை விளக்குக.

(iii) குழந்தைப் பருவத்தின் உடல் விருத்தியை விவரிக்குக.

(iv) கட்டிளஞர்கள் சமூக விரோதச் செயல்களில் ஈடுபடும் போக்கு உள்ளது. அத்தகைய **இரண்டு** செயல்களைக் குறிப்பிட்டு, அவற்றுக்கான காரணங்களை ஆராய்க.

***